ஆகிறது, இதை எப்படி 'பிரிவெண்டு' செய்யவேண்டும் என்ற ஆராய்ச்சி நடந்து வந்திருக்கிறதா? அந்த ஆராய்ச்சி இப்பொழுது எந்த நிலைமையில் இருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது ஆராய்ச்சி செய்ததிலே கம்பளிப்பூச்சிகளை ஒரு வயதான பிறகு கொல்லவே முடியாது என்று தெரியவருகிறது. ஆகையால் அதை எந்த நிலையிலே கொல்ல வேண்டும் என்பது கவனிக்கப்பட்டு, இது பரவியிருக்கும் பிராந்தியங்களில் ஆகாய விமானம் பயன்படுத்தி இதைக் கொல்லுவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

SRI P. K. MOOKIAH THEVAR : இந்தப் பகுதியிலே மந்திரி அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு பாதிக்கப்பட்ட மக்களுக்கு பாதி விலையில் விதைக்கடலை கொடுக்கப்படும், வரி வஜா செய்யப்படும் என்றெல்லாம் சொல்லிவிட்டு, ஒன்றுமே செய்யாமல் இருப்பது நியாயமா? மந்திரியின் வாக்குறுதியை நிறைவேற்றுமல் இருக்கலாமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மந்திரி என்ன வாக்குறுதி அளித்தார்கள் என்பதுபற்றி தகவல் என்னிடம் இல்லை. அவ்வாறு உறுதியாக வாக்குறுதி அளித்திருக்க முடியாது விவரங்கள் இல்லாமல். அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது விவசாயிகள் தங்களுடைய குறைகளை, கோரிக்கைகளை தெரிவிக்கிறார்கள். அவர்கள் பரிசீலனை செய்வோம் என்று சொல்லுவார்கள். அந்தக் குறைகள் பரிசீலனை செய்யப்படுகின்றன. பரிசீலனை செய்யப்பட்டு சில முடிவுகளும் எடுக்கப்பட்டுவருகின்றன.

*Kar paddy (destruction by birds)*

* 1291 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் கடற்கரை ஓர கிராமங்களில் பள்ளக் கால்களில் சாகுபடி செய்யப்படும் கார் நெல் மகசூலை "செரவி" என்னும் பட்சிகள் ஆயிரக்கணக்கில் வந்து ஆண்டு தோறும் அழித்து வருவதை அரசாங்கம் அறியுமா?

(இ) அப்படியானால், அப்பறவைகளினால் சேதம் ஏற்படாமல் தடுக்க அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறதா? அதன் விவரமென்ன?

(உ) இல்லையானால், அத்தகைய முயற்சி ஏதேனும் எடுத்துக்கொள்ளப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) Yes, Sir.

(இ) & (உ) Till recently, the Government have not taken any step in this regard as no incidence of this pest of alarming nature has so far been recorded. But these birds can be scared away by beating drums especially at nights when they are found to cause damage to paddy crops. It has been suggested that as these birds make a very delicious dish the "Shikaris" may be encouraged to shoot them. Instructions have been issued to all the District Officers concerned for the adoption of the above methods by enlisting the co-operation of the ryots through the village panchayats.

SRI A. VEDARATHNAM : இந்தக் கடற்கரை பகுதிகளில் உள்ள கார் மகசூல் 3 அடி, 4 அடி தண்ணீரில் நடக்கிறது. இந்தப் பறவைகள் கம்பளிப் பூச்சிகள் போல் அண்டர்கிரௌண்டிலிருந்து வருவதில்லை. பத்தாயிரக் கணக்கில் ஆகாயத்திலிருந்து வந்து அந்த இடத்திலே மகசூலை அழித்துவிடுகின்றன. கால்படி தானியம் கூட கிடைப்பதில்லை.

21st August 1961]

ஆண்டுதோறும் இதனால் பல ஆயிரக் கணக்கான ரூபாய் நஷ்டம் ஏற்படுகிறது. அம்மாதிரி தானியத்தை சேதப்படுத்துவதனால், இதை உடனடியாக தவிர்ப்பதற்கு தீவிரமாக தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆகாயத்திலிருந்து பறவைகள் வருவதினால் இந்தத் தொல்லை ஏற்பட்டு பயிர்கள் நாசப்படுத்தப்படுவதால், அவைகளை கொல்லத்தான் வேண்டும். இதுபற்றி வட்டார வளர்ச்சி அதிகாரிகளுக்கும், விவசாய இலாகா அதிகாரிகளுக்கும் மற்றவர்களுக்கும் தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதற்கு விவரங்கள் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன.

SRI V. SUBBIAH : இந்த "செரவி" என்று சொல்லக்கூடிய பட்சிகள் சில சந்தர்ப்பங்களில் சூரியனையே மறைத்துவிடக்கூடிய அளவிலே ஏகமாக வந்துகொண்டிருக்கின்றன. கரிசல் பிரதேசத்தில் கம்பு, தினை போன்ற மகசூல்களை ஒரே நாளில், காவல் இருந்தாலும், அழித்துவிட்டுப் போய்விடுகின்றன. அப்பேர்ப்பட்ட பட்சிகளை ஒழிப்பதற்கு திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மனிதர்களே சிலர் சுரண்டுகிறார்கள். அப்படியிருக்கும்பொழுது பறவைகள் பயிர்களை சாப்பிடுவது இயற்கைதான். பயிர்களை காப்பதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமோ அவைகளெல்லாம் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகின்றன.

SRI K. VINAYAKAM : Do these "Seravi" birds come only during nights? If so, how is it possible for the Shikaris to shoot these birds in darkness?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am afraid the hon. Member has no idea of Shikari skill. Shikaris do kill birds and animals even during nights.

### *Temples at Vikramangalam*

* 1292 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Temple Inspector, Ariyalur, or the Assistant Commissioner, Hindu Religious and Charitable Endowments Board, ever inspected Soleswarar and Varadaraja Perumal temples, Vikramangalam, Udayarpalayam taluk, and examined the accounts of the temples during 1959 and 1960;

(*b*) whether it is a fact that the Temple Inspector made a report to the Assistant Commissioner, Tiruchirappalli, against the managing trustee about his reprehensible conduct; and

(*c*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Yes, Sir.

(*c*) Charges have been framed against the Managing Trustee and the matter is still pending before the Area Committee.